1

# சிறப்புடையோர்களே சிந்தியுங்கள்.

திருத்தூதரே உமது நாயனில் நின்றும் உம்மளவில் இறக்கி வைக்கப் பட்டதை எத்திவைப்பிராக. நீர் அந்தப்படிச் செய்யவில்லையாலை: நீர் நாயனின் தூதுவைஎத்திவைக்காதவராகி விடுவீர் உம்மை மனிதர்கள் (கொல்வதை)விட்டும் அல்லாஹ் பாதுகாத்துக் கொள்வான் (குர்ஆன்5:67)

ஒரு வாக்கியமாயினும் என்னைத்தொட்டும் (பிறருக்கு) எத்திவையுங்கள் (நூல்:புகாரி)

சகோதரர்களே!:குர்ஆன் மூலம் ரசூல் அவர்களும் ஹதீதின்மூலம் கற்றறிந்த அறிவாளிகளாகிய முஸ்லிம் பேரறிஞர்களும் அதை நிலை நிறுத்தும் சிறப்பு வாய்ந்த உலமாக்களும் பொதுவாக ஒவ்வொருமனிதப் பிறவியும் மற்றவர்களுக்கு எத்திவைத்தல் கடமை. தப்லீக் வேலையில் ஈடுபடுவது அவசரமும் அவசியமுமாகும் என்பதை விளக்குகிறேன்.

தற்காலம் தப்லீக் ஜமாஅத் எனும் கூட்டத்தார்கள் ஊர் ஊராக நாடுகள் அனைத்திலும் பட்டிதொட்டிகளிலும், சிற்றூர், பேரூர்களிலும், பட்டினங்களிலும் சென்று தப்லீக்வேலையை, அவர்களின் கடமையை நம்கண்முன் செய்துவருவதையும் நாம் அனைவரும் பார்க்கின்றோம். தப்லீக் இயக்கத்தைக் கொண்டும் அன்னவர்களின் பிரச்சாரத்தைகொண்டும் பல்லாயிரக்கணக்கான முஸ்லிம் மக்கள் திருத்தப்பட்டு நேரான சன்மார்க்கத்தைத்தழுவி நல்லது கெட்டதை அறிந்து ஐங்காலத் தொழுகைகளை முதல்படியாக நினைத்து தொழுது வருவதையும் பார்க்கின்றோம். காலம் அனைத்திலும் மதுபானம் அருந்தியவர்கள், விபச்சாரத்தில்மூழ்கியவர்கள், பெருங்கொண்ட பாவங்களை அறிந்தும் அறியாமல் செய்தவர்கள் எல்லாம் தப்லீக்இயக்கத்தால் திருத்தப்பட்டு அன்னவர்கள் பெரும் பெரும் அறிவாற்றல் படைத்த தீன்தாரிகளாக காணப்படுவதை கண்டு பூரிப்படைகின்றோம். இந்நிலையில் ஒருசில ஆலிம்கள் எனப்படுவோர் தப்லீக் ஜமாஅத்தார்களைப் பார்த்து வஹ்ஹாபிகள் என்றும் அன்னவர்கள் கூட்டங்களுக்குப் போகவேண்டாமென்றும் சில போலி (பொய்) பிரச்சார நோட்டிஸ்களும் (சுவிசேங்களும்) தப்புத்தவறாகவும் முன்பின் பெயர்கள் இல்லாமலும் பெயர்களைவைத்தும் பிரசுரம் செய்து இருக்கிறார்கள். அதைப்பார்த்த முஸ்லிம் பெருங்குடிமக்கள் ஏமாந்துபோக மாட்டார்கள் என்பதையும் நான் அறிவேன். இத்தகைய வெளியிடுகளை கண்கொண்டு பார்க்கமாட்டர்கள் என்பதையும் நான் உணர்வேன். துஷ்பிரச்சாரம் புரியும் அன்னவாகளுக்கு நீங்கள் நல்லறிவைப் புகட்ட முன் வாருங்கள்.

இந்நாடு அனைத்திலும் தப்லீக் பிரச்சாரம் செய்து வரும் ஜமாஅத்தார்கள் அன்னவர்களும் சுன்னத் ஜமாஅத்தைச் சேர்ந்த மத்ஹபுகளைப் பின்பற்றிய ஸாலிஹான மூமின்களாவார்கள். சிறப்பு வாய்ந்த அன்னவர்களைப்பற்றி இழிவாகவும் கழிவாகவும் ஏசியும் பேசியும் எழுதக்கூடியவர்கள் பக்கா புரட்டர்கள், சுயநலவாதிகளாகவும் இருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

1958ல் பெயரில்லாது (ஹிஸ்புல்லா சபை) வெளியீடு என்றும் தப்லீக் ஜமாஅத்தில் வஹ்ஹாப்பியத்தின் விஷக்கிருமிகள் என்று ஓர் வெளியிடு காணப்படுகிறது. அந்த வெளியீட்டில் அனேக ஸாலிஹான உலமாக்களைக் காபிர்கள் என்றும் முர்தத்துகள் என்றும் வரையப்பட்டிருக்கிறது. அந்த நூலில் வரையப்பட்டிருக்கும் இழிவான கருத்துகள் அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் பொருத்தமற்றது சரியான கருத்து இல்லை என்பதற்கு சிறியதோர் ஆதாரத்தை உங்கள் மத்தியில் தருகின்றேன். நீங்கள் அனைவரும் மேலே குறித்த விஷயங்கள் அனைத்தும் உண்மை இல்லை என்று அறிந்துணர்வதற்கு ஓர் ஆதாரமாகும்.

உதாரணமாக மேற்படி நூல்களில் முதல் வெளியீடு, பதிப்பகம் மதுரை. நூருல்ஹக் என்ற நூல் பக்கம் 21, 22 பக்கங்களில் 21 முதல் 23வரை குறிக்கப்பட்டுள்ள பத்வாவில் அல்லாமா கலீல்அஹ்மது அல்லாமா அஷ்ரப்அலி தானவி முதலிய பெரியோர்களை காபிர்கள் என்றும் முர்தத்துகள் என்றும் தீர்ப்பு வெளியிடப்பட்டுள்ளது.

மேற்படி தீர்ப்பு வெளியிட்டவர் மக்கா ஹறமின் கிதாபுகளை பாதுகாக்கும் பியூன் (Peon) அஸ்ஸெயிது கலீல் அவர்களின் புதல்வன் அஸ்ஸெயிது இஸ்மாயில் என்று காணப்படுகிறது. பத்வா வெளியிட்ட வருடம் ஹிஜ்ரி 1291ம் ஆண்டு அறபி இலக்கத்திலும் இங்கிலீஷ் இலக்கத்திலும் காணப்படுகிறது. மேற்படி தேதியில் மவ்லான அஷ்ரப்அலி அவர்கள் 4நான்கு வயது குழந்தையாக இருக்கின்றார்கள். இந்தத்தேதியில் அவர்களை மக்கா வாசிகளிலுள்ள மேலே குறித்த பியூன் (Peon) காபிர் பத்வா விடுவதற்கு எவ்விதமான காரணமும் நியாயமும் யோக்கியதையும் இல்லாததால் மேற்படி பத்வா கீழ்த்திசை நாடிய இழிமகனாலும், புரட்டர்களின் கற்பனையான "பத்வா" வாகவே இருப்பதால் இவ்வளவு வேற்றுமைகள் கிடைக்கிறது என்பதைப்பற்றி எனது ஊரான காயல்வாசி மக்களுக்கும் முக்கிய பிரமுகர்களுக்கும் நான் தெரியப்படுத்தி வந்தேன். மேற்படி 2ம் பதிப்பு 1958-ல் மதுரை நூருல்ஹக் பிரசில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்ட நூல். 25,26 பக்கங்களில் ஹிஜ்ரி தேதியை வேண்டும் என்றே எடுக்கப்பட்டிருக்கிறது. அதே பெயருள்ள நூல் மூன்றாம் பதிப்பு தூத்துக்குடி ராமன் பிரஸில் மூன்றாம் பதிப்பாக 1960ல் வெளியிடப்பட்ட பதிப்பிலும் 25,26 பக்கங்களில் மேற்படி தேதி வேண்டுமென்றே எடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இந்தப் புரட்சிகரமான அண்டர்கிரவுண்ட் பத்வாக்களையும் நான்கு வயது குழந்தைக்குப் குஃப்ரியத்தையும் மத மாற்றத்தையும் ரித்தத்தையும் எழுதக்கூடிய முப்திகளும் அதை மொழி பெயர்ப்பு செய்யக்கூடியவர்களும் கொடுத்து வந்த தேதிகளை உண்மை மறைவதற்காக வேண்டுமென்று சொல்லி எறியக்கூடியவர்களும் எந்த விதமான உண்மை வாதிகளாக இருக்கமுடியும்? இவர்களை இஸ்லாமிய மார்க்கப் பக்தியுள்ள முஸ்லிம் பொதுமக்கள் எப்படி நம்ப முடியும் என்பதை முஸ்லிம் பொதுமக்களே நீங்களே சிந்தித்துக் கொள்வீர்களாக.

மேற்படி நூல்களில் ஷரீ அத்துக்கும் மார்க்கத்துக்கும் புரம்பாகவும் மாறாகவும் கூட்டியும் குறைத்தும் கருத்துக் குற்றங்கள் ஏராளமாக இருக்கின்றன. அவைகளை விவரிக்கப் புகுந்தால் ஏடுகள் கொள்ளாது. பொன்போன்ற நேரம் வீணாகிவிடும் என்பதை நினைத்தும் நிறுத்திக் கொண்டோம். என் உள்ளத்தில் உதித்த கருத்துக்களையும், உண்மையான ஹக்கான எண்ணத்தையும், சொல்லவேண்டிய-கூறவேண்டிய கடமையும் பொறுப்பும் எனக்கிருப்பதால் "தப்லீக்" ஜமாஅத்தைப்பற்றி விளக்கம் தருகிறேன். இதைப் பார்வையிடும் முஸ்லீம்கள் உண்மையை உணர்ந்து பயன்படுத்திக் கொள்ள வேண்டுகிறேன்.

தப்லீக்ஜமாஅத்தில் மூலக்கர்த்தாக்களிடம் எந்தவிதமான கெட்ட கொள்கைகளோ, சமூக வழிகேடோ கிஞ்சிற்றும் மருந்துக்குக்கூட கிடையாது என்பது திண்ணம். தப்லீக்ஜமாஅத் மூலகொள்கை உள்ளவர்கள் அனைவர்களும் ஸாலிஹான மக்களாகவும், தீனின் உண்மையான (சத்திய) ஸ்தாபனத்தை ஸ்தாபிக்கக் கூடியவர்களாகவும் இருந்துள்ளார்கள்-இருக்கிறார்கள் என்பதை வலியுறுத்திக் கூறுகிறேன். மேற்கூரிய உலமாக்களை நிந்திப்பதும், குஃப்ரியத்துப் படுத்துவதும் ஆதாரமற்றது கெட்ட கொள்கைகளாகும். இக்கெட்ட கொள்கைகளில் நாம் சிக்குண்டு அதில் அகப்படாமல் ஆண்டவனின் கோப அக்கினிக்குள் புகாமல் நரக வேதனை அடையாமல் அல்லாஹ் நம் அனைவர்களையும் காப்பாற்றுவானாக. ஆமீன்.

நான் "தப்லீக்" கூட்டங்களில் பலவற்றில் கலந்திருக்கிறேன். அவர்களின் வாயால் வஹ்ஹாபியத்தின் (கொள்கை) ஒரு வார்த்தையேனும் என் காதால் கேட்டதில்லை. அவர்களின் போதனைகள் மனிதனின் ஈமானின் விசுவாசத்தை பலப்படுத்துவதாகவும் (தக்வா) தெய்வநம்பிக்கையை உறுதிப்படுத்தக் கூடியதாகவும் இருக்கிறது. நாட்டில் ஊடுருவிப் பாய்ந்துவரும் நாஸ்திகப் பேய்களை விரட்டியடிக்கவும் உண்மையான ஆஸ்திகத்தை காப்பாற்றவும் தப்லீக் ஜமாஅத்தார்களால் முடிகிறது. இக்கால முஸ்லிம்கள் மத்தியில் தெய்வ நம்பிக்கையற்று நாகரீகம் எனும் பெயரால், அநாகரீகத்தை வளர்த்து சமூகத்திற்கு இழிவைத்தேடும் ஈனர்களை ஒழித்துக்கட்ட தப்லீக் இயக்கம் மிகமிக நாட்டிற்கு தேவையாகும்.

இஸ்லாமிய சகோதரர்களே! இஸ்லாத்தின் ஒழுக்கங்களையும் ஓர்மைகளையும் பண்பையும் பாழ்படுத்தி, மடமைகளையும் மவ்டீகங்களையும் இஸ்லாத்தில் விலக்கப்பட்ட அனுச்சரங்களையும் மதமாகக் கருதும் இக்காலத்தில் குபிரியத்தும் மட்டரக எண்ணங்களும் மிகுந்த இக்காலத்தில் முஸ்லிம் மக்கள் (நிரீஸ்வர) காபிர்களை நாஸ்திகள் தலைவர்களாகக் கருதி தலைவிரிக்கோலமாகக் கொண்டு தலைதெறித்து நடக்கும் இந்நாளில் மதப்பற்றுதலையும் தூஷிக்கும் (அவமதிக்கும்) நாளில் மதக்குருக்களையும் மத உபதேசங்களையும் தூஷணையாகக் கருதப்பட்டுவரும் இந்த நாளில் சில உலமாக்கள் தங்களை மஷாயிகுகள் என்றும் தங்களைக் கண்ணியப்படுத்துவதற்காக தங்களின் ஞாபகம் மறந்துவிடக் கூடாது என்பதற்காக தங்களுடைய போட்டோ படங்களை அலங்கரித்து முஷாஹதாச் செய்யும்படி தங்கள் சிஷ்யகோடிகளுக்கு வைதீகமாகத்திட்டம் வகுத்துகொடுக்கிறதாகத் கூறப்படும் இந்தக் காலத்தில மேலும் உலமாக்கள் ஸாலிஹீன்கள் அரசர்கள் இவர்களின் போட்டோ படங்களை நிறுத்தி வைப்பது ஷரீஅத்தைச் சார்ந்தது என்று தாவாச்செய்வதாகக் கூறப்படும் இக்காலத்தில் அவைகளை காது தாழ்த்தி ஏவல்-விலக்கல் செய்ய ஆளில்லாமல் பாமர முஸ்லிம்கள் தங்களை அறியாமலேயே முற்தத்துகளாக மாறும் இக்காலத்தில் ஹராமான கெட்ட செயல்களை வீண் விளையாட்டுகளை மதமாகக் கருதி மானம், ஈனம், ரோஷங்கெட்டு வெளியாக்கி வரும் இக்காலத்தில் முக்கியமாய் நமதூரிலும் (காயல்பட்டணத்திலும்) இப்பேய் பிசாசுக் கொள்கையான நாஸ்தீக கொள்கை வளர்ந்து வரும் நேரத்தில் இவ்விதமான கொள்கையற்ற வவ்வால்களுக்கு தக்கமுறையில் சமூகஒழுக்கமுள்ள தப்லீக் ஜமாஅத்தார்கள் இந்நகருக்கு வருகைதந்து உபதேசம் புரிவது அல்லாஹ்வின் கருணையென்று நாம் கருதுவதற்குப் பதிலாக அன்னார்களை ஏசவும் வாய்க்கு வந்தபடி தூஷிக்கவும் அல்லாஹ்வின் பள்ளிவாசல் (புனிதஸ்தலத்தில்)அவர்களுக்கு இடமில்லை யென்று அறிவற்ற பாமர மக்கள் துரத்தியடிப்பதும் அல்லாஹ்வின் ஆலயங்களில் பள்ளிவாசல்களில் அவர்களைப்பற்றி தூற்றப்படும் நூல்களை நுழைத்து விற்பனை செய்து வருவதும் உண்மை. ஆனால் இது முஸ்லிம்களுடைய சுபாவம் அல்ல குணமுமல்ல.

மேலும் இக்காலத்தில் அவ்விதமான ஜமாஅத்துக்களை ஏசியும் பேசியும் தூற்றியும் வஹ்ஹாப்பியத்தை கற்பிக்கவருகிறார்கள் என்றும் பாமரமக்களுக்கிடையில் பஸாதுகளை (அபாண்டப் பொய்களை)கிளப்பியும் உற்பத்தி செய்தும் அவர்களைச் சூழ்ந்திருக்கும் பாழ்குழிகாணது மீண்டும் பாழ்குழியில் தாழ்த்தப்பட்டு பல நூல்களும் பல பிரசுரங்களும் எழுதிவரும் அறிவற்றவர்களின் அறிவுக்கு என்ன சொல்வது? மேற்படி தொண்டினால் அவருக்கு கிடைத்த லாபங்கள் என்ன? என்பது தெரியவேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

மேற்படி ஆசிரியர்கள் சக்தியவான்களாக இருந்தால் அவர்கள் வரைய வேண்டிய விஷயம் தப்லீக் ஜமாஅத்தில் இன்னின்ன குற்றங்குறைகள் இருக்கின்றன, இன்ன ஆலிம் குற்றமுள்ளவர் இன்னின்ன வார்த்தைகளை தப்புத்தவறாகப் போதித்திருக்கின்றார்கள். அதை நீங்கள் (விசாரிக்க)கேட்க பகிரங்கமாக முஸ்லிம்களே முன்வாருங்கள் என்று அழைக்க வேண்டும். உண்மை மனப்பான்மை இருந்தால் அதுதான் நியாயமாகும். முஸ்லிம்கள் அனைவரும் ஒன்றுகூடி அதை ஆராய்ந்து நல்லவை கெட்டவைகளை அறிந்து நல்ல தீர்ப்பு வழங்க முடியும் இவைகள் இல்லாது அனாவிஷயமாய் இறந்துபோன பெரியோர்களைப்பற்றி ஆதாரமின்றித் தாக்குவது மக்களுக்கு என்ன பலாபலனை அளிக்கும்? என்பதைச் சற்று பொதுமக்கள் யூகித்து நல்லதோர் தீர்ப்புக் கூறுங்கள்

காதியானி அஹ்மதியர்கள் என்ற புதியதொருபிரிவினர் தோன்றி மார்க்கத்தை புரட்டி நபியுல்லாஹி ஸல்லல்லாஹீ அலைவஸல்லம் அவர்களுக்குப்பின் அஹ்மது காதியானியை நபி ரஸூல் என்றும் இன்னும் இதர நபிமார்கள்,ரஸுல்மார்கள் வரலாமென்றும் பகிரங்கமாக வாதாடி பாமரமுஸ்லிம்களை வழி

கெடுத்து மூர்தத்துகளாக ஆக்கிவரும் இந்நாளில் திரள் திரளாக தப்லீக் ஜமாஅத்தார்கள் வெளியாகி இவர்களுக்கெல்லாம் மறுப்புகள் செய்து மக்களை இஸ்லாத்தில் திருத்தி வருவதையும் இஸ்லாமியக்கட்டுபாட்டை உடைப்பதற்காகவேண்டி அவர்கள் மீது குற்றம் குறைகளைச் சுமத்தி பிரிவினையை ஏற்படுத்த பலநூல்களைவரைந்தும் ஏசிப் பேசித் திரிவதும் முற்றிலும் முறையற்றது. முக்கியமாக தற்காலத்துக்குப்பொருந்தாது

மேலும் இக்காலத்தில் தப்லீக்வேலை மிகமிக அவசியம் என்பதை வலியுறுத்திக் கூறுகின்றேன் தப்லீக் பிரச்சாரத்தில் நான் சதா காலமும் பங்கு பெற்றுஊர் ஊராகச்செல்வதற்கு வசதியின்மையால் நான் மிகவும் வருந்துகிறேன் தப்லீக் ஜமாஅத்தார்களைப்பற்றி பிரசுரம் வெளியிட்டவர்க்கோ அல்லது உங்களில் எவருக்காவது தப்பபிப்பராயம் இருக்கும் பட்சத்தில் அல்லாஹ்
உதவியால் என்னிடம் பேசவும் அதற்குத் தகுந்த பதில்அளிக்கவும் விவாதத்துக்கு வந்தால் வாதாடவும் அல்லது நெஞ்சுத்துணிவு உள்ளோர் பொதுமேடையைக் கூட்டி என்னை அழைத்தாலும் அதற்கு நான் தயங்கவில்லை வீரமுள்ளோர்கள் என்னிடம் வந்து கலக்கட்டும் என்று சவால் விடுகிறேன். தங்களுடைய வாய்களைக் கொண்டு அல்லாஹ்வின் "ஒளியை" அணைத்துவிட நாடுகிறார்கள், அல்லாஹ் தன்னுடைய "ஒளியை" நிரப்பமாகுவதையே நாடுகிறான்"

(குர்ஆனின் 9:32

ஆகவே, எனதன்புக்கும் உயர்பண்புக்கும் உரித்தான முஸ்லீம் சகோதரர்களே! நீங்கள் எல்லோர்களும் தப்லீக் வேலையில் ஈடுபட்டு ஒவ்வொரு "தப்லீக்" கூட்டத்திலும் கலந்து கொள்ளும்படி அன்புடன் வேண்டிக் கொள்கிறேன். இந்த துண்டு பிரசுரத்தை நான் யாருடைய வேண்டுதலுக்கோ இல்லாது, எதிர்காலத்தில் அத்தனைய காரியங்கள் நடைபெறாமல் இருக்கவும், மேலும் இப்பிரசுரத்தைப் பார்த்து, அல்லாஹுத்தஆலாவின் நேர்பாதையை அருளப் பெற்றவர்கள் மேற்கூறிய நல்லடியார்களைத் தூற்றுவதை விட்டும் விலகிக் கொள்வதற்காகவுமேயன்றி வேறல்ல என்பதைத் தெரியப்படுத்திக் கொள்கிறேன். தங்கள் எல்லோர்களின் துவாவையும் ஆதரவு வைத்து தங்கள் எல்லோர்களுக்கும் எனது அஸ்ஸலாமுஅலைக்கும் என்பதைத் தெரியப்படுத்திக் கொண்டு இதை முடித்துக் கொள்கிறேன். அல்ஹம்துலில்லாஹ்.

அரபி கையொப்ப முத்திரையுடன்

முஹம்மது அப்துல்காதிர் இப்னு அல்ஆலிம் முஹம்மது அபூபக்கர் மிஸ்கின் அஸ்ஸித்திக் அல்காதிரி

இங்ஙனம் :

மி.சு. முகம்மது அப்துல்காதிறு ஆலிம், சதர் முதர்ரீஸ் மத்ரஸதுல் பாஸியா

இதை ஆமோதித்தவர்களின் கையொப்பம் :

மு.க. செய்யிது இபுறாகீம் சாகிபு ஆலிம் அலியார் தெரு

சா. சாகுல்ஹமீது ஆலிம், சொளுக்கார் தெரு.